10th April 1958] [Mr. Speaker]

Sri A. A. Rasheed.
Sri A. Mariappan.
Sri A. Chidambaranatha Nadar.
Sri J. Matha Gowder.
Sri M. S. Selvarajan.
Sri B. Doraisami Reddiar.
Sri P. S. Ellappan.
Sri M. P. Sarathi.
Sri D. S. Authimoolam.
Sri S. Pakkirisami Pillai.
Sri V. K. Kothandaraman.
Sri A. V. P. Asaithambi."

The Mover, of course, is separate. I have not mentioned his name, because it is part of the motion.

The motion was put and carried.

(3) THE MADRAS PLANTATIONS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 16 OF 1958).

* THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958[a] (L.A. Bill No. 16 of 1958) be referred to a Select Committee."

The list of names will be furnished later.

Sir, the question of levying a tax on agricultural income has been engaging the attention of the Government. The Land Revenue Reforms Committee recommended among other reforms the levy of an agricultural income-tax over and above the land revenue assessment, the levy being applied in the first instance to plantation areas and extended gradually to other areas. This recommendation was accepted and the Madras Plantations Agricultural Income-Tax Act, 1955, was placed on the Statute Book. The Act applies to five plantation crops, namely, tea, coffee, rubber, cinchona, and cardamom. The Act has now been in existence for three years. In the discussions with the Planning Commission, the State Government have given an undertaking to raise enough resources to balance the revenue budget. Many new schemes are likely to be sanctioned during the current financial year, and this will widen the gap still further. The need for extending the levy of Agricultural Income-Tax Act to areas other than plantation areas has thus arisen. In the non-plantation areas, a surcharge on land revenue on larger holdings is now being levied, but the income from the surcharge is comparatively small and far less than what can be secured by an Agricultural Income-tax. The Government have also taken a decision to fix only a provisional ceiling on land holdings for the present. Social justice demands that a portion of the advantage derived by the people holding land in excess of that ceiling should be appropriated by the State towards common benefit. Having regard to all these considerations, the Government have decided to bring forward this Bill.

a Published in the *Fort St. George Gazette*; dated 8th April 1958.

[Sri M. A. Manickavelu] [10th April 1958

The main provisions of the Bill are—

(1) There will be two kinds of exemptions—one based on the extent of land held and the other on the actual agricultural income derived. Persons holding less than a certain specified extent of land will be exempted from agricultural income-tax. Persons holding in excess of the exempted extent of land will not be liable to the tax, if the agricultural income derived is less than the specified exemption limit. Any person who holds land not exceeding the following extent will not be liable to the tax :—

(*a*) two acres used for growing arecanut, or

(*b*) five acres used for growing tea, or

(*c*) fifteen acres used for growing coffee, rubber, cinchona or cardamom, or

(*d*) ten acres in the case of wet land assessed to land revenue at the rate of eight rupees and above per acre, or

(*e*) thirteen and one-third acres in the case of—

(i) wet land assessed to land revenue at the rate of four rupees and above but below eight rupees per acre, or

(ii) garden land irrigated from a Government source of irrigation, or

(*f*) sixteen and two-thirds acres in the case of—

(i) wet land assessed to land revenue at any rate below four rupees per acre, or

(ii) garden land irrigated from well or any source of irrigation other than a Government source of irrigation, or

(*g*) twenty-six and two-thirds acres in the case of dry land except those which are irrigated.

Any person who holds land in excess of the extent noted above will be liable to tax unless the agricultural income derived by him is less than Rs. 3,000.

1-10 p.m. In the case of every Hindu undivided family or Aliyasanthana family or branch or a Morumakkattayam tarvad or tavazhi including a Nambudiri family or any other class governed by the law applicable to Nambudiris which satisfies the condition that it consists of at least five members, the limit of agricultural income referred to will be Rs. 6,000. All pattadars paying land revenue of Rs. 100 and above are likely to become liable to the tax. There are about 26,000 individual pattas paying an assessment of Rs. 100 and above in the State.

The rates of tax and slabs will be as those applicable to plantation areas as given in the Bill and I need not mention them.

It may happen that many of the bigger landholders who will be liable to agricultural income-tax may also have a substantial income from non-agricultural sources. It is proposed to assess the agricultural income of such landholders at higher rates. The smaller assessees will be afforded facilities for compounding, in

10th April 1958] [Sri M. A. Manickavelu]

order to relieve them of the burden of keeping detailed accounts. Any person who holds land not exceeding three times the exempted extent may apply for permission to compound the agricultural income-tax payable by him and to pay in lieu thereof a lump-sum at the rate or rates mentioned in Part II of the Schedule to this Bill.

In the transferred areas of Kanyakumari district and Shencottah taluk of the Tirunelveli district, agricultural income-tax is already being levied under the Travancore-Cochin Agricultural Income-Tax Act, 1950. It is considered desirable to have only one Act applicable throughout the State; it is therefore proposed to repeal the Travancore Act and to extend the Madras Act as proposed to be amended to the transferred areas also.

The Madras Land Revenue Surcharge Act, 1954 will be repealed.

The above are the main provisions to embody which in the Madras Plantations Agricultural Income-tax Act, 1955, amendments to that Act will be made now. Incidentally, certain amendments which are found necessary in the actual working of the Act are also proposed to be made.

As the Bill is an important one, it is considered desirable that it should be referred to a Select Committee of the House for detailed scrutiny. Sir, the Members of the Select Committee proposed are as follows :—

1 The Hon. Sri M. A. Manickavelu.
2 The Hon. Sri C. Subramaniam.
3 The Hon. Sri M. Bhaktavatsalam.
4 Sri P. G. Karuthiruman.
5 Sri T. P. Elumalai.
6 Sri S. Sadasivam.
7 Sri K. G. Palaniswami Gounder.
8 Sri P. M. Munuswami Gounder.
9 Sri P. Ramachandran.
10 Sri R. Srinivasa Iyer.
11 Sri W. P. A. R. Chandrasekaran.
12 Sri R. Krishnaswami Naidu.
13 Sri T. Karia Gounder.
14 Sri G. Narayanaswami Naidu.
15 Sri B. K. Linga Gowder.
16 Sri M. G. Shankar.
17 Sri P. R. Srinivasa Padayachi.
18 Sri M. Kalyanasundaram.

19 Sri V. K. Ramaswami Mudaliar.
20 Sri M. Jangal Reddiar.
21 Sri M. Selvaraj.
22 Sri K. Sattanatha Karayalar.
23 Sri A. R. Marimuthu.
24 Sri S. M. Annamalai.

Sir, I request the House to accept this motion for referring the Bill to the Select Committee.

MR. SPEAKER : Motion moved—

"That the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 16 of 1958) be referred to a Select Committee, consisting of the following members :—

1 The Hon. Sri M. A. Manickavelu.
2 The Hon. Sri C. Subramaniam.
3 The Hon. Sri M. Bhaktavatsalam.
4 Sri P. G. Karuthiruman.
5 Sri T. P. Elumalai.
6 Sri S. Sadasivam.
7 Sri K. G. Palaniswami Gounder.
8 Sri P. M. Munuswami Gounder.
9 Sri P. Ramachandran.
10 Sri R. Srinivasa Iyer.
11 Sri W. P. A. R. Chandrasekaran.
12 Sri R. Krishnaswami Naidu.
13 Sri T. Karia Gounder.
14 Sri G. Narayanaswami Naidu.
15 Sri B. K. Linga Gowder.
16 Sri M. G. Shanker.
17 Sri P. R. Srinivasa Padayachi.
18 Sri M. Kalyanasundaram.
19 Sri V. K. Ramaswami Mudaliar.
20 Sri M. Jangal Reddiar.
21 Sri M. Selvaraj.
22 Sri K. Sattanatha Karayalar.
23 Sri A. R. Marimuthu.
24 Sri S. M. Annamalai."

I understand that the House is not going to sit in the afternoon. Therefore, is it the desire of the House to sit till 2 o'clock and finish the business? I must also remind the House that there is another

10th April 1958] [Mr. Speaker]

small Bill which will be moved by the Hon. Home Minister in this House. How long do we want for this Bill? Would the House agree to the convention that Members of the Select Committee need not speak now? It is a wholesome convention. How long do we take for this Bill?

Sri M. KALYANASUNDARAM : We can finish this Bill by 1-45 and for the other Bill, we will take 15 minutes.

The Hon. Sri M. A. MANICKAVELU : That is all right, Sir.

Mr. SPEAKER : All right.

**Sri M. A. MUTHIA CHETTIAR :** தலைவர் அவர்களே, இந்த மசோதாவை இந்தத் தடவை கொண்டுவரமாட்டார்கள் என்று எண்ணி இருந்தேன். இந்த மசோதாவை ஆட்சேபித்து நான் பேசவில்லை. இந்த மசோதாவைக் கொண்டுவரலாம். ஆனால் நான் சொல்ல வந்தது என்னவென்றால், ஆகஸ்டு மாதம் நடக்க இருக்கும் சட்ட சபைக் கூட்டத்தில் தான் வருவதாக முன்பு இருந்தது. இப்போது அவசரமாகக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதோடு செலக்ட் கமிட்டிக்கு இந்த மசோதாவை இப்போது அனுப்புகிறார்கள். இதை ஜாயிண்ட் செலக்ட் கமிட்டிக்கு அனுப்ப வேண்டுமென்பது என் யோசனை.

Mr. SPEAKER : It is a money Bill. We cannot have a Joint Select Committee.

**Sri M. A. MUTHIA CHETTIAR :** அப்படியானால் சரி. நான் இதை எதற்காகச் சொன்னேன் என்றால், இது மிகவும் முக்கியமான மசோதா. விவசாய வருமான வரி போடவேண்டாம் என்று சொல்வதற்கு நான் வரவில்லை. ஆனால் மற்ற வருமானத்தையும் சேர்த்துப் போடுகிறார்கள். இது அரசியல் அமைப்புக்கே விரோதமாக இருக்கும் என்று சொல்கிறார்கள். இப்போது யோசிக்காமல் எதையாவது போட்டு விட்டு பின்னர் இது கோர்ட்டுக்குப் போய் செல்லத்தக்கது அல்ல என்று தீர்ப்பாகி விட்டால் நன்றாக இராது. ஆகவே இதைப்பற்றி செலக்ட் கமிட்டியிலேயே நன்றாக ஆலோசனை செய்து இதை விட்டுவிட்டால் நன்றாக இருக்கும் என்று நான் யோசனை கூற விரும்புகிறேன். ப்ளான்டேஷன் எஸ்டேட்டுகள் இதனால் பாதிக்கும்படியாக விட்டுவிடக் கூடாது. இதைப் பற்றிச் சொல்லும்போது எனக்கு இந்த ராஜ்யத்தில் ஏதோ ப்ளான்டேஷன் எஸ்டேட் இருப்பதாகவும் அதற்காகச் சொல்வதாகவும் நினைக்கக் கூடாது. எனக்கு இந்த ராஜ்யத்தில் ப்ளாண்டேஷன் எஸ்டேட் கிடையாது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்தச் சட்டத்தையே நான் ஆட்சேபிப்பதாக நினைக்கக் கூடாது. அரசாங்கத்தார் கொண்டுவந்து விட்டார்கள். நானும் இதை ஆதரிக்கிறேன். ஆனால் இதர வருமானங்களையும் இதனோடு சேர்த்துக் கொண்டு கணக்கிடுவது என்பது சரியல்ல. இதைப்பற்றி மட்டும் ஆலோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். ஆந்திர ராஜ்யத்தில் விவசாய வருமானம் 5,400 ரூபாய்க்கு மேல் இருந்தால் வரி விதிப்பதாக யோசனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். இன்னும் கூடுதலாக அதைச் செய்தால்தான் நல்லது என்று நினைக்கிறேன். அதைப்பற்றியும் செலக்ட் கமிட்டியில் நன்றாக யோசிக்க வேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

செலக்ட் கமிட்டிக்கு இந்த மசோதா அனுப்பப்படுவதால் இதைப்பற்றி இங்கே முக்கால் மணி நேரம் மட்டும் விவாதத்திற்கு நேரம் ஒதுக்கியிருப்பது சரியல்ல. அதுவும் பொறுக்குக் கமிட்டியில் உள்ளவர்கள் விவாதத்தில் கலந்து கொள்ள வேண்டாம் என்று சபாநாயகர் நேரம் இல்லாத காரணத்தினால் . . .

MR. SPEAKER : அவர்கள் பேசக் கூடாது என்று நான் சொல்ல வில்லை. அது ஒரு ' கன்வென்ஷன் ' என்று சொன்னேன்.

SRI M. A. MUTHIA CHETTIAR : அதைத்தான் நானும் சொல்கிறேன். நேரம் இல்லை என்ற காரணத்திற்காக அப்படிச் செய் திருப்பது சரியல்ல. நேரம் இல்லை என்றால் நாளைக்கு வேண்டுமானாலும் உட்கார்ந்து விவாதிக்க வேண்டும். எதற்காக பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பும் மசோதாவுக்கு ஜெனரல் டிஸ்கஷன் முன்னால் நடத்துவது என்று விதிகளில் செய்திருக்கிறோம். பலர் பலவிதமான அபிப்பிராயங் களை முன்கூட்டியே இந்தச் சபையில் தெரிவித்தால் இவற்றை யெல்லாம் வைத்துக்கொண்டு பொறுக்குக் கமிட்டி அங்கத்தினர்கள் நல்ல முறையில் பின்னால் அவற்றைப் பரிசீலனை செய்ய முடியும். அப்படியில்லாவிட்டால் பொறுக்குக் கமிட்டி அங்கத்தினர் பத்து பேர்களுக்கு மட்டும் தபால் மூலம் இந்தத் தேதியில் இன்ன இடத்தில் கூட்டம் நடக்கிறது என்று தெரிவித்து விட்டால் போதுமே. சபையில் பலர் விவாதம் செய்தால் அந்த யோசனைகளை வைத்துக்கொண்டு அவர்கள் பொறுக்குக் கமிட்டியில் நல்ல சீர்திருத்தங்களை செய்ய முடியும் என்பதற்காகத்தான் பொது விவாதம் நடப்பது என்று வைத்திருக்கிறோம். அதற்கு வாய்ப்பு இல்லா மல், முக்கால் மணிக்குள் இந்த விவாதத்தை முடித்துவிடுவது சரியல்ல. விவசாய மக்களுடைய பிரதிநிதிகள் எல்லாம் தங்கள் யோசனைகளைச் சொல்வதற்கு வாய்ப்பு இருக்க வேண்டும். ஆகவே, மிகுந்த அவசரப் படாமல் நல்ல முறையில் இந்த மசோதாவைத் தயாரித்து கொண்டுவர சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

என் அபிப்பிராயம், ஜாஸ்தி உள்ளவர்களிடம் சர்சார்ஜ்யை வேண்டு மானால் நான்கணு கூட்டி யிருக்கலாம். செலக்ட் கமிட்டிக்கு இந்த பில் போகப் போகிறது. அடிஷனல் சர்சார்ஜ் வேண்டுமானாலும் போட்டு விட்டு இந்த வரியை விட்டு விடலாம். இதை 3,000 என்று வைத்துக் கொண்டு மற்ற வருமானத்தை சேர்த்துக் கொள்ளக்கூடாது. செலக்ட்
1-20. p.m. கமிட்டி ரிப்போர்ட் வந்த பிறகு இதுபற்றி நன்கு ஆலோசித்துத்தான் ஒரு முடிவு எடுக்க வேண்டும். அந்த சபை அங்கத்தினர்களுக்கு இதில் மிகவும் அக்கரை உள்ளவர்களாக யிருக்கிறார்கள். அவர்களையும் ஆலோ சனைக்கு சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று அமைச்சர் அவர்கள் சொன் னதை நான் வரவேற்றுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவை கொண்டு வந்ததற்காக நான் அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன். எனக்கு முன் பேசிய முத்தையா செட்டியார் அவர்கள், அவர்களுந்தான் இதை ஆதரித்தார்கள். ஆனால் அவர் ஆதரித்தது வேறு விதத்தில். சர்சார்ஜ் வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம், ஆனால் இந்த மாதிரி வரி அவசியம் இல்லை என்று சொன்னார்கள். 1954-ல் இந்த மாதிரி ஒரு மசோதா, அக்ரிக்கல்ச்சரல் இன்கம் டாக்ஸ் ப்ளாண்டேஷ னுக்குக் கொண்டுவரும்போது வரி போட வேண்டாமென்று சொன்னார்கள். இப்படி வருமான வரி விதிப்பதால்தான் சர்க்காருக்கு அதிக லாபம் கிடைக்கும். சர்க்கார் இன்று 75 லட்சம் ரூபாய் என்று சொன்னாலும், அது குறைவாகும், அதைவிட கூடுதல் கிடைக்கும். அப்படி கிடைக்க வில்லை என்றால், இச்சட்டத்தில் லூப் ஹோல்ஸ் இருக்கிறது என்றுதான் அர்த்தம். வரி விசாரணை கமிஷன் செய்த சிபார்சின் அடிப்படையில்தான் இந்த மாதிரி வரி விதிப்பொன்றை கொண்டு வந்திருக்கிறார்கள். இன்று 3,000 ரூபாய்க்கு அதிகமாக வைத்துக் கொண்டு நில வரியை எடுத்து விட்டு, மேற்கொண்டு போகப் போக அதிக வரி போடுவது நன்றாக யிருக்கும். இருபத்தைந்து, முப்பது ரூபாய் கந்தாயம் செலுத்தக் கூடிய வர்களுக்கு இவ்வரியில் இருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டியது மிக அவசியம். ஆந்திராவில் பிரகாசம் அவர்கள் இருக்கும்போது, 10 ரூபாய்க் குக் குறைவாக கந்தாயம் செலுத்தக் கூடியவர்களுக்கு குறிப்பாக நில வரி கூடாதென்று ஒரு மசோதா கொண்டு வருவதாக இருந்தார்கள். ஆனால் அதற்கு முன்பே அவர் மந்திரி சபை போய்விட்டது. இன்று நில

வரி கட்ட முடியாமல் பலர் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். பலர் அவர்களது பூமிகளை விற்றுத்தான் இந்த வரி செலுத்த வேண்டியிருக்கிறது. ஆகவே, 25, 30 ரூபாய் கந்தாயம் கொடுப்பவர்களுக்கு இவ்வரி விலக்கு அளிக்க வேண்டும். அதிகப்படி வருமானம் வரக்கூடியவர்களுக்கு கூடுதல் வரி விதிக்கலாம், ஸ்லாப் ஸிஸ்டத்தின் அடிப்படையில். இன்று விலைவாசிகள் ஏறிக்கொண்டும் இறங்கிக்கொண்டும் இருக்கின்றன. விலை இறங்கும் போது அதைக் காண்பித்து அதில் இருந்து தப்பித்துக்கொள்ள வழி ஏற்படும். இன்று 100 படி கொள்ளும் மூட்டை ஒன்றுக்கு விலை 30, 40 ரூபாய் என்று வைத்துக்கொண்டால் திடீரென்று அதன் விலை 20, 25 ரூபாய் என்று குறைந்துவிடும். ஆகவே, அதனால் வரி விலக்கு வேண்டுமென்று கேட்பார்கள். ஒரிஸாவில் இதுபற்றி ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது. அவர்கள் சிபார்சு செய்தது, கம்மெர்ஷியல் க்ராப்சில் ஆறில் ஒரு பங்கு சர்க்காருக்கு கொடுக்கவேண்டுமென்று சிபார்சு செய்தார்கள். அவ்விதத்தில் இங்கும், ஆறில் ஒரு பங்கு சர்க்காருக்கு கொடுக்க வேண்டுமென்ற அடிப்படையில் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**SRI J. MATHA GOWDER :** கனம் சபா நாயகர் அவர்களே, இந்த அக்ரிகல்ச்சுரல் இன்கம்டாக்ஸ் என்பது முன்பு, **Agricultural Income from Plantations** என்று இருந்ததை இப்பொழுது **Agricultural Income-tax from the lands** என்று மாற்றுகிறோம், ப்ளாண்ட்டேஷனில் இருந்து கிடைத்த வருமானத்தை இன்று பூமியின் அடிப்படையிலே செய்து இந்த பில்லை மாற்றுகிறோம். அப்படி மாற்றும் போது, ஏற்கனவே ப்ளாண்ட்டேஷனுக்கு நான் சென்றாண்டு இங்கு இருக்கும் போதே ப்ளாண்ட்டேஷன் அக்ரிக்கல்ச்சரல் இன்கம்டாக்ஸ் அதிகப் படுத்தினோம். அதை ஒரளவு அதிகப் படுத்தும்போது, அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், இதை இன்னும் அதிகமாக்கினால் பொன் வாத்தை அறுப்பது போலாகும், பொன் வாத்தை அறுக்கக்கூடாது என்று. ஒரளவிற்குத்தான் அதை போட முடியும் என்றும் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது கூறினார்கள். ஆனால் இன்று இந்த பில்லைப் பார்க்கும்போது, இது செலக்ட் கமிட்டிக்கு போகப்போகிறது. செலக்ட் கமிட்டி அங்கத்தினர் இதை ஒரளவு பார்க்கவேண்டும். இதற்கு முன் இயற்றிய சட்டத்தில் 20 ஏக்கர்களுக்குமேல் தோட்டம் உள்ளவர்கள் கணக்கு வைக்க வேண்டியதில்லை என்று இருந்தது. இன்று அது 15 ஏக்கர் என்று குறைக்கப்பட்டிருக்கிறது. ஏனென்று தெரியவில்லை. ப்ளாண்ட்டேஷன்ஸ்-ஐ பூமியின் அடிப்படையில் மாற்றுவதோடிருந்தால் பரவாயில்லை. ஆனால் அதுவும் 20-ல் இருந்து 15 ஏக்கர் என்று குறைத்திருப்பது கண்டு நான் விசனப்படுகிறேன். டீக்கு 20 ஏக்கர் என்றும் காப்பிக்கு 70 ஏக்கர் என்றும் முன் இருந்தது. இப்பொழுது அவை, 16 என்றும், 40 என்றும் வைத்திருப்பதை சர்க்கார் மாற்றி, முன்பு இருந்ததைவிட அது கூடுதலாக இருக்கவேண்டுமே தவிர அது குறையக் கூடாது, அப்படி குறைப்பது நியாயமல்ல. அதேநேரத்தில் **' Lands used for growing plantation crops '**—அதில் நீலகிரியில் இருக்கக் கூடிய உருளைக்கிழங்கும் சேருகிறது. உருளைக்கிழங்கு நான்க்ராப் என்று வரும்போது, இதன்படி, 10 ஏக்கருக்கு உள்ளாக பயிரிடுபவர்களுக்கு வரியில்லை என்று இருக்கிறது. ஆனால் 10 ஏக்கர் நெற்பயிர் இடுவோருக்கு செலவு என்னவாகும் என்று எனக்குத் தெரியாது. ஆனால் உருளைக்கிழங்கு, சாதாரணமாக ஒரு விவசாயிகூட 10 ஏக்கர் உருளைக்கிழங்கு பயிர் செய்கிறான். அதில் 80 மூட்டை கிழங்கு போட முடிகிறது. எண்பது மூட்டை போட்டால் விளைவு 160 அல்லது 200 மூட்டைக்கு மேல் விளைவதில்லை. இருநூறு மூட்டைக்கு விலை போட்டால் மொத்தம் 4,000 ரூபாய் கிடைக்கும். அதில், செலவு 3,000 ரூபாய்க்கு மேல் ஆகிவிடும். எங்கள் அனுபவ பூர்வமாகச் சொல்கிறேன். ஆயிரம் ரூபாய் கூட கூலி கிடைப்பதில்லை. ஆகவே, இந்த உருளைக்கிழங்கு விவசாயம் செய்கிறவர்களுக்கு குறைந்தது 30 ஏக்கருக்கு கம்மியாய் உள்ளவர்கள் பொட்டட்டோ

கல்டிவேஷன் செய்வதாயிருந்தால் அவர்களுக்கு இந்த வரியில் இருந்து விலக்கு அளிக்கவேண்டும். ஆயிரம், இரண்டாயிரம் ஏக்கர் உள்ளவர்களுக்கு வரியை வேண்டுமானால் அதிகப்படுத்தினாலும் நான் அதை ஆட்சேபிக்கவில்லை. ஆனால் பத்து ஏக்கருக்கு மேல் 11 ஏக்கர் கல்டிவேஷன் இருந்தாலும் அவர்களுக்கு வரி விதிப்பது என்பது மிகவும் கஷ்டமாகும். ஆகவே, செலக்ட் கமிட்டி இதை நன்கு பரிசீலனை செய்து, நீலகிரியைப் பொறுத்த வரையில் உருளைக்கிழங்கிற்கு நான் சொன்னது போல் ஒரு விலக்கு அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

காப்பி ஒரு வருஷத்தில் விளையக்கூடியதல்ல. டீ வருஷந்தோறும்
1-30 p.m. பலன் தரக்கூடியது. டீ 15 நாட்களுக்கு ஒரு தடவை பலன் தந்து கொண்டிருக்கும். காப்பி மூன்று வருடங்களுக்கு ஒரு முறைதான் பலன் தருகிறது. காப்பிச் செடியிலிருந்து ஒரு தடவை பலன் எடுத்த பிறகு அதை சீர்படுத்தி சுத்தம் செய்த பிறகு, மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் பலன் கிடைக்கிறது. ஒவ்வொரு ஆண்டிலும் பலன் கிடைக்காது. இதைப்பற்றி பல அங்கத்தினர்கள் தெரியாமல் இருந்திருக்கலாம். டீயை விட மூன்று மடங்கு அதிகமாக காப்பிக்கு இருக்கவேண்டும். பத்து ஏக்கர் காப்பிக்கு என்று இருந்தால் டீக்கு ஐந்து ஏக்கர் என்று இருக்க வேண்டும். ஆகவே காப்பிக்கு 30 ஏக்கர்களுக்குமேல் வரி என்று போட வேண்டும். சாதாரணமாக 10 ஏக்கர் என்பது சாதாரணமாக அங்குள்ள எல்லா மக்களும் வைத்துக்கொண்டு இருக்கிறார்கள். இவ்விதம் தோட்டங்கள் வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் 4,000 பேர்கள் இருக்கிறார்கள். இப்போது இருக்கின்ற முறை, இம்மாதிரி இருக்கின்ற 4,000 தோட்டக்காரர்கள் பாதிக்கின்ற முறையில் இருக்கின்றது. தனியாக ஐயாயிரம் ஏக்கர்கள், ஆறாயிரம் ஏக்கர்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள், அவர்களின்மீது வேண்டுமானால் வரியை எவ்வளவு வேண்டுமானாலும் போடலாம். ஆனால் நீலகிரி ஜில்லாவை பொறுத்த வரை அங்கு அதிகமாக இருப்பவர்கள் நான் முன்னால் சொன்ன தோட்டக்காரர்கள்தான். ஆகவே இவர்களது வரம்பு மிகவும் குறைந்திருக்கிறது. இதை அதிகமாக ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதைப்பற்றி செலக்ட் கமிட்டி நன்றாக பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர் முத்தையா செட்டியார் அவர்கள், செலக்ட் கமிட்டியில் அங்கத்தினர்களாக இருக்கக்கூடியவர்கள் பேசக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம் என்று சொன்னது தவறு. சாதாரணமாக செலக்ட் கமிட்டியில் இருக்கிறவர்கள் பேசுவதற்கு சமயம் இல்லாத நேரத்தில் இங்கே பேச வேண்டிய அவசியமில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம், அதல்லாமல் பேசக்கூடாது என்று எந்த விதமான சட்டமும் கிடையாது. இன்னொன்று நான் சொல்வது என்னவென்றால் நான் கனம் அங்கத்தினர்களை அவசரப்படுத்துவதாக நினைக்கக் கூடாது. கட்சித் தலைவர்கள் இத்தனை மணி நேரத்திற்குள் விவாதத்தை முடிக்க வேண்டும் என்று சொல்லும்பொழுது அதை பகிர்ந்து கொடுக்க வேண்டியது சபா நாயகரின் கடமை. இந்த சபை 5 மணிக்கு மேல் இருக்கவேண்டும் என்றோ அல்லது இன்னும் 10 நாட்களுக்குக்கூட வேண்டும் என்றோ சொல்வதாக இருந்தாலும் எனக்கு ஆட்சேபம் ஒன்றும் இல்லை. ஆகவே இன்னும் அங்கத்தினர்கள் பேசுவதற்கு 15 நிமிடங்கள் இருக்கின்றன. அங்கத்தினர்கள் அதற்குள்ளாக பேச வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI S. NAGARAJA MONIGAR :** தாங்கள் இதைப்பற்றி இவ்வளவு விளக்கமாக சொல்ல வேண்டியதில்லையே . . .

**MR. SPEAKER :** ஏனென்றால் உங்களைப் போன்றவர்கள் பேசுவதற்கு கையை தூக்கும்போது நான் அதற்கு இடம் கொடுக்காமல் இருந்தால், அதை நீங்கள் ஆட்சேபிக்கக் கூடாது என்பதற்காகத்தான் இவ்வளவு விளக்கமாகச் சொன்னேன். அடுத்தபடியாக கனம் நடராஜன் அவர்கள் பேசலாம்.

10th April 1958]

**Sri C. NATARAJA ODAYAR :** தலைவர் அவர்களே, இங்கு கொண்டு வரப்பட்டிருக்கும் விவசாய வருமான வரியை திராவிட முன்னேற்ற கழகத்தை சேர்ந்த நான் வரவேற்கிறேன். இருந்தாலும் இந்த வரியால் விவசாயிகள் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும். இதைப்பற்றி நான் அதிகமாக பேசவேண்டும் என்று நினைத்திருந்தேன். இந்த விவசாய வருமான வரி விவசாயிகளை பாதிக்காதவாறு மிராசுதார் வரி, என்றோ அல்லது ஜமீன்தாரி வரி என்றோ திருத்திக் கூறியிருக்கலாம். இதைப் பற்றி கூடுதலாக ஆலோசிப்பதற்காக இந்த மசோதா செலக்ட் கமிட்டிக்கு அனுப்பப்படுகிறது. செலக்ட் கமிட்டியில் இருக்கிற அங்கத்தினர்களுக்கு இதைப்பற்றி நல்ல முறையில் விளக்குவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஆனால் இதிலிருந்து விதி விலக்கு அளிக்கப்பட்டிருக்கின்ற என்போன்ற வர்களுக்கு இதில் பேச சபாநாயகர் அவர்கள் உரிமை அளித்திருக் கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். ஆகவே இங்கு நாங்கள் சொல்லும் ஆலோசனைகளை பரிசீலனை செய்து செலக்ட் கமிட்டி இதை நல்ல முறையில் கொண்டுவர வேண்டுமென்பதுதான் என்னுடைய ஆசை. இங்கு முன்னால் மாட்டு ஏர், கை ஏர் சம்பந்தமாக சட்ட மசோதா கொண்டு வரப்பட்டது. அது இப்போது கைவிடப்பட்டிருப்பதாக தெரிகிறது. இவ்விதம் கைவிட வேண்டிய காரணம் என்ன ? இவ்விதம் ஒவ்வொரு மசோதாக்களையும் கொண்டு வந்துவிட்டு கைவிட்டுக் கொண்டிருந்தால் இவைகளை ஏன் நாம் கொண்டு வரவேண்டும். ஆகவே இந்த மசோதாவும் முன்போல் சட்ட சபையில் கொண்டு வந்துவிட்டு பின் கைவிடாமல் இருக்க வேண்டும். இதே போன்று சட்ட மசோதாக்கள் வருகின்ற நேரத்தில் செய்தித் தாளில் இந்த சட்டத்தில் ஏற்படுகிற குறைகள் பற்றியும் இந்த சட்டத்தினால் பாதிக்கப்படுவர்களுடைய குறைகள் பற்றியும் செய்தித் தாளில் வேண்டுகோள் விடுக்கிறார்கள். இன்றைக்குக்கூட சில குறைகள் அறிவிக்கப் பட்டிருக்கிறது. விவசாயிகள் என்று கூறுகிறவர்கள் தங்களுடைய குறைகளை அமைச்சர் அவர்களிடத்திலோ அல்லது சட்டசபை அங்கத்தினர் களிடமோ வந்து தெரிவித்ததாக தெரியவில்லை. நம்முடைய நாட்டில் விவசாயிகள் எல்லாம் கல்வியற்றவர்களாக இருப்பதால்தான் இவ்விதம் வந்து தெரிவிக்கமுடியாத நிலையில் இருந்துகொண்டிருக்கிறார்கள். அவர் களுக்கு போதிய கல்வி திறமையில்லாத காரணத்தால்தான் நமக்கு இதுவரை வேண்டுகோள் விட்டுக்கொள்ளவில்லை என்று கூற வேண்டி யிருக்கிறது. வெங்காயத்தின் மீதோ அல்லது வெள்ளைப்பூண்டு மீதோ வரி போடப்படுகிறது என்றால் எத்தனையோ வேண்டுகோள் நமக்கு அடுக்கு அடுக்காக வந்து கொண்டிருக்கிறது. ஆனால் இவர்கள், விவசாயிகள், நமக்கோ அல்லது அமைச்சர்களுக்கோ இது வரையிலும் வேண்டுகோள் விட முடியாத அவல நிலையில்தான் இருந்து கொண்டு இருக்கிறார்கள். இந்த அவல நிலையை நாம் புரிந்து கொள்ள வேண்டும். ஆகவே அவர்களுடைய கோரிக்கைகளை நாம் கவனித்தாக வேண்டும், இன்றுள்ள நிலையில், 10 ஏக்கர் அல்லது 3,000 ரூபாய் வருமானம் வருகிறவர்களுக்கு வரி போடவேண்டும் என்று இருக்கிறது. இப்போது 10 ஏக்கர் வைத் திருக்கின்ற சாதாரண விவசாயி இதற்கெல்லாம் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டும். அதே மாதிரிதான் 300 ரூபாய்தான் எனக்கு வரு மானம் வருகிறது என்று கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். அல்லது அதற்கென்று நியமிக்கப்படுகிற அதிகாரி 5,000, 6,000 ரூபாய் வருமானம் இருக்கிறது என்று சொல்லிவிட்டு வரி விதித்தால் விதிக்கப்படுகிற வரியை கட்டிவிட்டுதான் விவசாயிகள் அப்பீல் செய்துகொள்ள முடியும். ஆகவே வெறும் ஏக்கர்களை வைத்துக்கொண்டு மாத்திரம் வரியை விதிக்கக்கூடாது. வருமானத்தின் அடிப்படையில் வரிகளை போடவேண்டும். நிலத்தின் அடிப்படையில் வரி விதிக்கவேண்டும் என்று கூறுகின்ற நேரத்தில் நிலத்தின் த்ரத்தையும் நாம் பார்க்கவேண்டும். நிலத்தின் தரத்தை கணக்கிடும்போது இப்போது குறிப்பிடப்பட்டிருக்கும் கணக்குக்கூட சரி யில்லை என்று சொல்லலாம். முன்பே சர்வே செய்த கணக்கு இப்போது சரியாக இருப்பதில்லை. ஆகவே இம்மாதிரியுள்ள காரியங்களில் விவசாயி களை பாதிக்காமல் இந்த சட்டத்தை ஏற்படுத்தவேண்டும். ஆகவே இப்

போது 3,000 ரூபாய் என்றிருப்பதை 5,000, 6,000 ரூபாய் என்று உயர்த்த வேண்டும். அப்போது கணக்கு வைத்துக்கொள்வது முதலியவற்றி லிருந்து சாதாரண விவசாயி பிழைத்துக்கொள்ள முடியும், ஆகவே. சாதாரண விவசாயி இந்த சட்டத்தால் பாதிக்கப்படாமல் இருக்க முடியும். ஆகவே இதை சிறிது உயர்த்தி 3,000 என்றிருப்பதை 5,000 என்று வைத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI V. K. RAMASWAMY MUDALIAR :** கனம் சபாநாயகர் அவர்களே, செலக்ட் கமிட்டியில் இருக்கும் அங்கத்தினர் என்ற முறையில் இதில் அதிகமாக பேச வேண்டாம் என்று ஒரு கன்வென்ஷன் இருக்கின்றது என்று சபாநாயகர் அவர்கள் சற்று முன்பு சொன்னது போல், நான் கூடுதலாக பேசவில்லை. ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்கள் இந்த விவாதத்தில் பேசியதைக் குறித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மசோதாவானது மேன்மை தங்கிய கவர்னர் அவர்களின் உரையின்போது இந்த மாதிரி மசோதா கொண்டு வரப்போகிறோம் என்று சொல்லி யிருக்கிறார்கள். அதன் பிறகு இந்த மாதிரி ஒரு மசோதா வரப்போகிறது என்று அதிக நாட்களாக எல்லோருக்கும் தெரியும். எல்லோரும் இதை எதிர்பார்த்துக்கொண்டேதான் இருந்தார்கள். நாம் சுமார் ஒன்றரை மாத காலமாக இந்த சட்ட சபையில் கூடி பல விவாதங்களையும் நடத்தி வருகிறோம். இதைப்பற்றி நாம் தீர்க்கமாக பரிசீலனை செய்து ஒரு முடிவுக்கு வந்து அதை இந்த சட்ட சபையின்
1-40 p.m. முன்பாக கொண்டுவரப் போகிறோம். இந்த மசோதாவைப் பரிசீலனை செய்ய பொறுக்குக் கமிட்டி போடப்பட்டிருக்கிறது. பொறுக்குக் கமிட்டி கூடிய சீக்கிரம் கூடும். அதில் நல்ல அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். இதை நன்றாக பரிசீலனை செய்து பொறுக்குக் கமிட்டி சட்ட மன்றத்தின் முன் இதைக் கொண்டுவரும். அதற்கு முன்பாக—அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், நானும் அதே மாதிரி அபிப்பிராயப்பட்டேன்—இந்த மசோதா சம்பந்தமான எல்லா விதமான **"Representations"** களையும் வரவழைத்து அந்தக் கமிட்டி பரிசீலனை செய்யும். நல்லது கெட்டதுகளை பொறுக்குக் கமிட்டியில் எடுத்துச் சொல்வதற்கு எல்லோருக்கும் வாய்ப்பு இருக்கிறது. ஆகையால் அவசரப்பட்டு இந்த மசோதாவைக் கொண்டு வருகிறார்கள் என்று யாரும் நினைக்க வேண்டியதில்லை. பொறுக்குக் கமிட்டி இதை நன்றாகப் பரிசீலிக்கும். மாகாணத்திலிருந்து வரும் எல்லாவித முறையீடுகளையும் விசாரித்து, வேண்டுமானால் ஒரு வாரத்திற்கோ அல்லது பத்து நாட்களோ இந்த சபை உட்கார்ந்து எல்லாவற்றையும் பரிசீலனை செய்து முடிவு எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லிக்கொண்டு, இந்த சந்தர்ப்பத்தை எனக்குக் கொடுத்ததற்காக சபாநாயகருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**THE HON SRI M. A. MANICKAVELU :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வரி விதிப்பைப்பற்றி, வருமானத்தின் மேலே வரி போடுவதுதான் சிறந்த முறையென்று நிலச் சீர்திருத்தம் பற்றி ஆராய்ச்சி செய்த கமிட்டி சிபார்சு செய்திருக்கிறது. அதோடு பல அங்கத்தினர்கள் கூட, இம்மாதிரியான வரிதான் நல்லது, இந்த மாதிரித்தான் போட வேண்டும், என் இந்த மாதிரி மசோதாவைக் கொண்டுவரவில்லை யென்று கூடக் கேட்டிருக்கிறார்கள். அப்பொழுது பதில் சொல்லுகிறபொழுது, நம்முடைய நாட்டிலே விவசாயம் செய்கிறவர்கள் அநேகருக்கு இம்மாதிரியான கணக்குகளை வைத்துக் கொள்ளும் முறை தெரியாது, ஆகையால் இதைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் புகுத்தவேண்டும், முதலிலே தோட்டக் கால் பயிர்கள், அதாவது டீ, காப்பி, போன்றவைகளுக்கு இம்மாதிரி முறையைக் கொண்டு வரலாம். மற்ற விவசாய வருமானத்தின்பேரில் பிற்பாடு கொண்டு வரலாமென்ற அடிப்படையிலே, முதலிலே "பிளாண்டேஷன் இன்கம்டாக்ஸ் சட்டத்தை நிறைவேற்றி இப்பொழுது மூன்று வருட காலமாக அது அமலில் இருக்கிறது. அதை ஒட்டித்தான், சாதாரண விவசாய வருமானத்துக்கும், ஓரளவுக்கு வருமானம் பெருகிறவர்களுக்கு முதலிலே இதை அமலுக்குக் கொண்டு வரலாம் என்ற வகையில்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது.

10th April 1958] [Sri M. A. Manickavelu]

முதலிலே பேசின அங்கத்தினர் அவர்கள் இதை இவ்வளவு சீக்கிரம் கொண்டு வருவார்கள் என்று எதிர்பார்க்கவில்லை, ஆகஸ்டு மாதத்தில் தான் வரும் என்று எதிர்பார்த்ததாகவும் சொன்னார். அவர் சொன்னதிலும் வித்தியாசம் இல்லை, நான் இப்பொழுது இந்த மசோதாவை இங்கே கொண்டுவந்ததிலும் வித்தியாசம் இல்லை. இதை ஒரு பொறுக்குக் கமிட்டிக்கு விடவேண்டுமென்ற உத்தேசத்துடன்தான் இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கிறதே தவிர, இதை இப்பொழுதே நிறைவேற்றுதவற்காக உத்தேசம் கிடையாது. பொறுக்குக் கமிட்டியில் இதைப் பரிசீலனை செய்து, அவர்கள் சிபார்சு செய்த பிற்பாடு, ஆகஸ்டு அல்லது செப்டம்பர் மாதத்தில் தான் இங்கே வரும். அதற்கு முன்னாலே செய்யவேண்டிய காரியங்களைத்தான் இப்பொழுது செய்கிறோம்.

இந்த சந்தர்ப்பத்திலே பொறுக்குக் கமிட்டியிலே இருக்கிற அங்கத்தினர்கள் இதிலே பேச வேண்டாமென்று நாம் நமக்குள்ளேயே ஒத்துக் கொண்டதை ஆட்சேபித்து, ஏன் பொறுக்குக் கமிட்டியில் இருக்கிறவர்கள் பேசக் கூடாது என்று கேட்டார்கள். முக்கியமான காரணம் என்னவென்றால், அந்தக் கமிட்டியில் இருக்கிறவர்களுக்கு போதுமான சந்தர்ப்பம் இருக்கிறது. அந்தக் கமிட்டியில் இல்லாதவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுப்பது அவசியம் என்ற வகையிலே அந்த நியதியை நாமெல்லோரும் ஒத்துக்கொண்டிருக்கிறோம். அதை கட்டாயமாக யாரும் செய்யவில்லை. இன்னொரு விஷயத்தையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மன்றத்திலேயே சென்ற 15 அல்லது 20 வருஷங்களாகவே நடக்கிற சம்பிரதாயமென்னவென்றால், இந்த மாதிரி மசோதா வரும்பொழுது, அநேகமாக அங்கத்தினர்கள் பொதுக் கொள்கையைப்பற்றித்தான் பேசுவார்கள். உட் பிரிவுகளைப்பற்றிப் பேசமாட்டார்கள். ஒரு மசோதா பொறுக்குக் கமிட்டிக்கு விடப்படுகிறது என்றால், இரண்டு மூன்று நிமிஷங்களிலேயே ஒன்றும் பேசமால் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பும் சம்பிரதாயம் இங்கே இருந்தது எனக்குத் தெரியும். ஆகவே பொறுக்குக் கமிட்டி அங்கத்தினர்கள் இதிலே பேசாமல் மற்றவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுப்பதில் தவறு ஒன்றுமில்லை என்றுதான் சொல்ல விரும்புகிறேன்.

இதிலே சில சட்ட கஷ்டங்கள் இருக்கின்றன, அதையெல்லாம் சரியாகப் பார்க்க வேண்டுமென்று சொன்னார்கள். இது விஷயத்தில் கனம் அங்கத்தினருக்கு எவ்வளவு பொறுப்பும், ஆர்வமும் இருக்கிறதோ, அதைவிட அதிகமாக எனக்கு பொறுப்பும், ஆர்வமும் இருக்கிறது. சட்ட கஷ்டங்கள் இல்லாமல் பார்த்துக் கொள்வதில் நாங்கள் கண்ணும் கருத்துமாக இருக்கிறோம். பொறுக்குக் கமிட்டி விசாரணையின்போதும் இதைப் பற்றி கவனிக்கலாம், பிற்பாடு கவனிக்கலாம். மறுபடியும் இங்கே விவாதத்துக்கு வரும்பொழுதும் கவனிப்பதற்கு சந்தர்ப்பம் இருக்கிறது. ஆகவே இதைப்பற்றிப் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை.

இன்னும் அங்கத்தினர்கள் ஏதேதோ சொன்னார்கள். " அது இல்லை, இது இல்லை, அப்படிச் செய்ய வேண்டும், இப்படிச் செய்ய வேண்டும் " என்றெல்லாம் சொன்னார்கள் (சிரிப்பு). எப்படி எப்படித் திருத்தியமைக்க வேண்டுமோ, அதற்காகத்தான் இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புகிறோம். இப்பொழுது திருத்தம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. சித்திரம் எழுதுகிறவர் முதலிலே " ஸ்கெலிடன் அவுட்லைன் " தான் எழுதுகிறார். பிற்பாடுதான் மூக்கு, மீசை எல்லாம் வைக்கிறார். (சிரிப்பு.) அதே மாதிரி, இந்த மசோதா ஒரு வகையில் இருக்க வேண்டுமென்று தயாரித்துக் கொண்டு வருகிறோம். பொறுக்குக் கமிட்டியினர் அங்கங்களை வைத்து, நன்றாக ஜோடித்து, நல்ல வகையிலே இதைக் கொண்டுவந்து சமர்ப்பிப்பார்கள். ஏதாவது விட்டுப் போயிருந்தால் திருத்துவதற்கு வேண்டிய சந்தர்ப்பம் இருக்கிறது.

இன்னும் பொது ஜனங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கு போதுமான சந்தர்ப்பம் அளிக்க வேண்டுமென்று சொன்னார்கள். இம் மாதிரியான மசோதாக்களில் அந்த மாதிரி சந்தர்ப்பத்தை கொடுத்து

வருகிறேம். இதற்கும் அப்படி கொடுப்பதாகத்தான் உத்தேசம். இந்தப் பொறுக்குக் கமிட்டியானது மே மாதத்தில் 2 அல்லது 3 தேதியில் சென்னையில் கூடும். ரெப்பிரசென்டேஷன்ஸ் கொடுக்க வேண்டியதை குறிப்பிட்ட காலத்திற்குள் கொடுக்க வேண்டுமென்று சொல்லி, எல்லோருக்கும் சந்தர்ப்பம் கொடுத்து, அதையெல்லாம் பரிசீலித்து, பிற்பாடு மே மாதக் கடைசியிலே, மூன்ருவது வாரத்திலே, நீலகிரியில் கூடும் பொழுதும் யாராவது நேரிலே வந்து சொல்ல வேண்டுமென்று நினைத்தால், அதற்கும் சந்தர்ப்பம் அளித்து, பிற்பாடு முடிவு எடுக்கப்படும். ஆகவே, வேண்டிய சந்தர்ப்பமும் வசதியும் அளிக்கப்படும்.

(ஸ்ரீ என். கே. பழனிசாமி : ஐயாயிரத்துக்குக் கீழே . . . )

கீழே, மேலே எல்லாவற்றையும் பார்த்து மசோதாவைத் திருத்தலாம். (சிரிப்பு). பிளாண்டேஷன்ஸைப்பற்றி கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார்கள். அந்தப் பிராந்தியத்திலே இருக்கிறவரும் பொறுக்குக் கமிட்டியில் இருக்கிருர். ஆகவே, எந்தெந்த வகையிலே இந்த மசோதாவைத் திருத்தலாமோ அதற்கெல்லாம் இடமிருக்கிறது. ஆகவே, இதைப்பற்றி அநாவசியமாக பயப்பட வேண்டியதில்லை என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

கனம் சபாநாயகர் அவர்கள் எல்லா அங்கத்தினர்களேயும் சுருக்கமாகப் பேச வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். ஆகையால் நானும் சுருக்கமாகத்தான் பேசவேண்டும். (சிரிப்பு).

**MR. SPEAKER :** கனம் மந்திரி அவர்கள் எவ்வளவு நேரம் வேண்டுமானுலும் பேசலாம். (நீடித்த சிரிப்பு).

**THE HON. SRI M. A. MANICKAVELU :** ஆகவே சுருக்கமாகப் பேச்சை முடித்துக் கொண்டு, இந்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்புவதை எல்லோரும் ஒத்துக்கொண்டு, இந்த மசோதா நல்ல முறையில் வருவதற்கு உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Plantations Agricultural Income-tax (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 16 of 1958) be referred to a Select Committee consisting of the following Members :—

1 The Mover of the Bill, The Hon. Sri M. A. Manickavelu.
2 The Hon. Sri C. Subramaniam.
3 The Hon. Sri M. Bhaktavatsalam.
4 Sri P. G. Karuthiruman.
5 Sri T. P. Elumalai.
6 Sri R. Sadasivam.
7 Sri K. G. Palaniswamy Gounder.
8 Sri P. M. Munusami Gounder.
9. Sri P. Ramachandran.
10 Sri R. Srinivasa Iyer.
11 Sri W. P. A. R. Chandrasekharan.
12 Sri R. Krishnasami Naidu.
13 Sri T. Karia Gounder.
14 Sri G. Narayanaswami Naidu.
15 Sri B. K. Linga Gowder.
16 Sri M. G. Sankar.
17 Sri P. R. Srinivasa Padayachi.
18 Sri M. Kalyanasundaram.

19 Sri V. K. Ramaswami Mudaliar.
20 Sri M. Jangal Reddiar.
21 Sri M. Selvaraj.
22 Sri K. Sattanatha Karayalar.
23 Sri A. R. Marimuthu.
24 Sri S. M. Annamalai."

The motion was put and carried.

MR. SPEAKER : I nominate the Hon. Sri M. A. Manickavelu, the Minister for Revenue as the Chairman of the Select Committee.

## VI.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER—*cont.*

### (3) COMMITTEE ON PUBLIC ACCOUNTS.

MR. SPEAKER : I have to announce to the House that out of the fifteen members who were nominated to the Committee on Public Accounts, as a result of the election held to-day, i.e., 10th April 1958, the following fourteen members have been declared duly elected to the Committee on Public Accounts for the year 1958–59 :—

1 Sri K. S. Ardhanareeswara Gounder.
2 Sri K. S. G. Haja Sheriff.
3 Sri M. Jagannathan.
4 Sri M. Kalyanasundaram.
5 Sri M. Karunanithi.
6 Sri V. A. Muthaiya.
7 Sri T. M. Nallaswami.
8 Sri V. K. Ramaswamy Mudaliar.
9 Sri K. Ramasubbu.
10 Sri P. U. Shanmugam.
11 Srimathi Dr. Soundaram Ramachandran.
12 Sri M. D. Thiagaraja Pillai.
13 Sri G. Vagheesam Pillai.
14 Sri M. William.

Under Rule 171 (2), the Hon. the Minister for Finance is a Member of the Committee, ex-officio.

Under Rule 172 of the Assembly Rules, I nominate Sri V. K. Ramaswamy Mudaliar as the Chairman of the Committee.

## VII.—GOVERNMENT BILLS—*cont.*

### (4) THE PRISONERS (MADRAS AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 14 OF 1958).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Mr. Speaker, Sir, I move that the Prisoners (Madras Amendment) Bill, 1958[a] (L.A. Bill No. 14 of 1958) be taken into consideration.

[a] Published in the *Fort St. George Gazette,* dated 31th March 1958.